# அலகு - 1

## அ) அகர வரிசையில் அமைத்தல் (ஒவ்வொன்றிற்கும் 10 பெயர்கள்)

### 1. ஊர்ப் பெயர்கள்

| வினா | விடைகள் |
|---|---|
| பொன்னேரி | ஆனைமலை |
| கண் | ஊதூர் |
| வெங்கனூர் | ஏனாத்தூர் |
| ஏனாத்தூர் | கண் |
| பனைமலை | நடுக்காவேரி |
| ஊதூர் | பனைமலை |
| ஆனைமலை | பொன்னேரி |
| மதுரை | மதுரை |
| நடுக்காவேரி | மீஞ்சூர் |
| மீஞ்சூர் | வெங்கனூர் |

### 2. தமிழ்ப் புலவர்களின் பெயர்கள்

| வினா | விடைகள் |
|---|---|
| இளங்கீரன் | இடைக்காடன் |
| இரும்பிடர்த்தலையார் | இம்மென்கீரானார் |
| இம்மென்கீரானார் | இரும்பிடர்த்தலையார் |
| இடைக்காடன் | இளங்கீரன் |
| இளம்பூதனார் | இளந்திரையனார் |
| இளநாகனார் | இளநாகனார் |
| இறையனார் | இளம்பூதனார் |
| இளவெயினனார் | இளவெயினனார் |
| இளந்திரையனார் | இளவேட்டனார் |
| இளவேட்டனார் | இறங்குடிக்குன்றநாடன் |
| இனிசந்தநாகனார் | இறையனார் |
| இறங்குடிக்குன்றநாடன் | இனிசந்தநாகனார். |

### 3. தமிழ் இலக்கிய நூல்களின் பெயர்கள்

| வினா | விடைகள் |
|---|---|
| எழிலோவியம் | அறநெறிச்சாரம் |
| உண்மை விளக்கம் | ஆசாரக்கோவை |
| ஐந்திணை ஐம்பது | இனியவை நாற்பது |
| அறநெறிச்சாரம் | ஈட்டி எழுபது |
| இனியவை நாற்பது | உண்மை விளக்கம் |
| ஒருபா ஒருபஃது | ஊசி முறி |
| ஆசாரக்கோவை | எழிலோவியம் |
| ஏலாதி | ஏலாதி |
| ஓர் இரவு | ஐந்திணை ஐம்பது |
| ஈட்டி எழுபது | ஒரு பா ஒரு பஃது |

| | |
|---|---|
| ஊசி முறி | ஓர் இரவு |
| ஔவைக் குறள் | ஔவை குறள் |

4. பெண்பாற் புலவர் பெயர்கள்

| வினா | விடைகள் |
|---|---|
| கண்ணுத்திரையார் | ஆதிமந்தி |
| மணியார் | இளவெயினி |
| ஆதிமந்தி | கண்ணுத்திரையார் |
| நச்செள்ளையார் | காமக்கண்ணியார் |
| கோவை | கோவை |
| பொத்தியார் | சங்கவை |
| மாசாத்தியார் | நச்செள்ளையார் |
| காமக்கண்ணியார் | நப்பசலையார் |
| இளவெயினி | பொத்தியார் |
| பொன்முடியார் | பொன்முடியார் |
| நப்பசலையார் | மணியார் |
| சங்கவை | மாசாத்தியார் |

ஆ) பிழை நீக்கி எழுதுதல்:

5. அரம் செய்ய விரும்பு.
விடை: அறம் செய்ய விரும்பு.

6. ஆளும் வேளும் பல்லுக்கு உறுதி.
விடை: ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி.

7. இங்கு விரகு விற்கப்படும்.
விடை: இங்கு விறகு விற்கப்படும்.

8. உணக்கு உனவு தேவையா?
விடை: உனக்கு உணவு தேவையா?

9. எண்ணை குவியல் நல்லது.
விடை: எண்ணெய்க் குளியல் நல்லது.

10. ஐந்தின் வலையாதது ஐம்பதில் வளையுமா?
விடை: ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?

11. கம்பன் வீட்டும் கட்டுத் தரியும் கவிபாடும்.
விடை: கம்பன் வீட்டு கட்டுத்தறியும் கவிபாடும்.

12. நான் கள்ளூரிக்குச் செல்வேன்.
விடை: நான் கல்லூரிக்குச் செல்வேன்.

13. பணிவுடைமை நள்ள பண்பு.
விடை: பணிவுடைமை நல்ல பண்பு.

14. பேருந்து நிருத்தும் இடம்.
விடை: பேருந்து நிறுத்தும் இடம்.

1. எப்பொழுது உண்ண வேண்டும்?
   பசித்த பிறகு உண்ண வேண்டும்.

2. எவரைக் கண்டால் எமன் ஓடிப்போவான்?
   காலை மாலை நடந்து செல்பவரின் காலைத் தொட்டுக் கும்பிட்டுக் எமன் ஓடி போவான்.

3. நூறு வயது தருவன யாவை? (10)
   - உடல் உறுதியாக உள்ளவன் இன்பமாக வாழ்வான். இடமும் பொருளும் இன்ப வாழ்வு தராது.
   - இருக்கும் இடத்தை சுத்தமாக வைத்துக் கொண்டால் நீண்ட நாள் வாழலாம். காலையிலும் மாலையிலும் நடந்து செல்பவரின் காலைத் தொட்டு எமன் ஓடிப் போவான்.
   - கூழை குடித்தாலும் குளித்த பின்பே குடிக்க வேண்டும். ஏழையாக இருந்தாலும் இரவில் நன்றாய் உரங்க வேண்டும்.
   - சுத்தமான காற்று, தண்ணீர், பசித்த பின் உணவு உண்ணுதல் நோயை ஓட்டி நூறு வயது வாழ வழிவகுக்கும்.

4. வேங்கை நாட்டை ஆண்டு வந்த மன்னர் யார்?
   வேங்கை நாட்டை ஆண்ட மன்னன் வேங்கை மார்பன் ஆவான்.

5. அரசரின் ஆணை யாது?
   வயதானவர்களை நாடு கடத்துவதே அரசரின் ஆணையாகும்.

6. மதிவாணன் தன் தந்தையை எங்கே மறைத்து வைத்தான்?
   மதிவாணன் தன் வீட்டில் ஒரு மறைவான இடத்தில் வைத்துப் தன் தந்தையைப் பாதுக்காத்தான்.

7. அறிஞர் கூறிய செயலைச் செய்பவர்க்கு மன்னர் அறிவித்த பரிசு யாது?
   அறிஞர் கூறிய செயலைச் செய்பவருக்கு மன்னர் ஆயிரம் பொற்காசுகள் தருவதாக அறிவித்தான்.

8. மதிவாணன், என்னைப் பொறுத்தருள வேண்டும் என்று ஏன் கூறினான்?
   அரசன் வயதானவர்களை நாடு கடத்தச் சொல்லியும், மதிவாணன் தன் தந்தையை யாருக்கும் தெரியாமல் பாதுகாத்து வந்ததற்காக அரசனிடம் தன்னை பொறுத்தருள வேண்டினான்.

9. வெளிநாட்டிலிருந்து வந்த அறிஞர் கூறிய செயல்கள் யாவை? (6)
   - வெளிநாடிலிருந்து வந்த அறிஞர் செழியன் அவையினரைப் பார்த்து, இந்நாட்டில் நான் சொல்வது போல் செய்யக்கூடிய நபர்கள் எவரேனும் உண்டா? என வினா எழுப்பினார்.
   - மன்னர் மற்றும் அவையில் உள்ளவர்கள் என்ன என்று கேட்டனர்? சாம்பலைக் கயிறாகத் திரிக்க வேண்டும், வெண்சங்கில் நூலைக் கோத்துத் தரவேண்டும் என்றார்.

10. சங்கின் எதிர்புறத்தில் கட்டெறும்பு வந்தது எப்படி? (6)
    - ஒரு கட்டெறும்பில் மெல்லிய நூலைக் கட்டினான்.
    - சங்கின் எதிர்புறத்தில் கற்கண்டுத் துண்டு ஒன்றை வைத்தான்.
    - எறும்பு தானாகச் சங்கினுள் நுழைந்து கற்கண்டை நோக்கி எதிர்புறம் வந்துவிட்டது.
    - எறும்பை விட்டவிட்டு நூலைக் கோத்துவிட்டான் மதிவாணன்.

11. சாம்பலில் கயிறு செய்தது எப்படி?

- ஒரு கயிறைத் துண்டு துண்டாக வெட்டினான். ஒரு துண்டைத் தட்டில் வைத்து அதைத் தீ வைத்துக் கொளுத்தினான்.
- அது பற்றி எறிந்தது. தீ அணைந்தப்பின் சாம்பல் கயிறு போலாக் காட்சியளித்தது.
- அதனைக் கலையாமல் அரசவைக்கு கொண்டுவந்து காட்டினான் மதிவாணன்.

<u>அ) ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன்:</u>

1) அறஞ்செய விரும்பு
2) ஆறுவது சினம்
3) இயல்வது கரவேல்
4) ஈவது விலக்கேல்
5) உடையது விளம்பேல்
6) ஊக்கமது கைவிடேல்
7) எண் எழுத்து இகழேல்
8) ஏற்பது இகழ்ச்சி
9) ஐயம் இட்டுஉண்
10) ஒப்புரவு ஒழுகு
11) ஓதுவது ஒழியேல்
12) ஔவியம் பேசேல்
13) அஃகஞ் சுருக்கேல்

<u>ஆ) தமிழில் மொழிபெயர்க்க:</u>

| | | |
|---|---|---|
| 1. TELEPHONE | - | தொலைபேசி |
| 2. CELLPHONE | - | கைபேசி |
| 3. COMPUTER | - | கணினி |
| 4. INTERNET | - | இணையம் |
| 5. FAX | - | தொலைநகலி |
| 6. E-MAIL | - | மின்னஞ்சல் |
| 7. XEROX | - | படியெடுப்பான் |
| 8. DEMAND DRAFT | - | கேட்பு வரைவோலை |
| 9. MICRO – BIOLOGY | - | நுண் உயிரியல் |
| 10. POST BOX | - | தபால் பெட்டி |
| 11. FIRST AID | - | முதலுதவி |
| 12. OXYGEN | - | உயிரியம் |

**13. GOVERNMENT ORDER - அரசாணை**

## இ) மரபுத் தொடர்களை மொழிபெயர்த்தல்:

1) **All the glitters is not gold.**
மின்னுவதெல்லாம் பொன்னல்ல.
2) **Haste makes waste.**
பதறிய காரியம் சிதறிப் போகும்.
3) **Health is wealth.**
நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்
4) **Makes hay while the sun spines.**
காற்றுள்ள போதே தூற்றி கொள்.
5) **Time and tide wait for none.**
நேரமும் காலமும் யாருக்காகவும் காத்திருக்காது.
6) **Empty vessels make grater sound**
நிறை குடம் தலும்பாது.
7) **Barking dog seldom bite.**
குறைக்கிற நாய் கடிக்காது.
8) **Rome was not built in a day.**
ஒரே நாளில் கோட்டையை பிடிக்க முடியாது.

## ஈ) ஆங்கிலத்தில் மொழி பெயர்க்க:

9) தமிழ்நாட்டின் தலைநகர் சென்னை.
**Chennai is Capital of Tamil Nadu.**
10) தமிழகத்தின் நெற்களஞ்சியம் தஞ்சாவூர்.
**Tanjore is Paddy granary of Tamil Nadu.**
11) தமிழரின் முதன்மை உணவு அரிசிச் சோறு.
**Rice is the staple food of Tamil People.**
12) தமிழ்ப் பெண்கள் உடுத்துவது புடவை, ஆண்கள் கட்டுவது வேட்டி.
**Ladies in Tamil Nadu wear Saree and Gents wear Dhoti.**
13) தமிழரின் தலைமையான திருவிழா பொங்கல்.
**Pongal is the Preeminent Festival for Tamil Nadu.**

## திருக்குறள்:

*ஒழுக்கமுடைமை - குறள் 138.*

1) நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம் தீயொழுக்கம்
என்றும் இடும்பை தரும்.

நல்லொழுக்கம் என்றும் நல்லின்பம் தரும். தீய ஒழுக்கம் எப்பிறவியிலும் துன்பத்தைக் கொடுக்கும்.

*தெரிந்து செயல்வகை - குறள் 467*

2) எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.

**ஒரு செயலை செய்யத் தொடங்குமுன் அதனை முடிக்கும் வழி அறிந்து தொடங்க வேண்டும். தொடங்கிய பின் பிறகு பார்க்கலாம் என்பது தவறு.**

***<u>ஆள்வினை உடைமை - குறள் 616</u>***

3) **முயற்சி திருவினை யாக்கும் முயற்றின்மை**
**இன்மை புகுத்தி விடும்.**
**முயற்சி ஒருவனுக்குச் செல்வத்தை பெருகச் செய்யும். முயற்சியின்மை வறுமையை கொடுக்கும்.**

***<u>தெரிந்து தெளிதல் - குறள் 504.</u>***

4) **குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள்**
**மிகைநாடி மிக்க கொளல்.**
**ஒருவர் குணங்களையும் குற்றங்களையும் பார்த்து அவற்றுள் மிகுதியை கண்டு அவரை அறியவேண்டும்.**

***<u>ஊக்கம் உடைமை - குறள் 595</u>***

5) **வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்**
**உள்ளத் தனையது உயர்வு.**
**மலர்த்தண்டின் அளவு அதன் நிற்கும் நீரின் அளவே, அது போல ஊக்கத்தின் அளவே அவர் உயர்வு பெறுவார்.**

---

## மூன்று பொற்காசுகள்

நாகப்பன் பெருஞ்செல்வந்தர். அவர் தன்னிடம் வேலையில் சேர்பவர்களுக்கு ஆண்டு முடிவில் மூன்று பொற்காசுகள் ஊதியமாக வழங்குவார். அதற்குமுன் அறிவைச் சோதிப்பதற்கு மூன்று செயல்களைக் கொடுப்பார். அவற்றைச் சரியாகச் செய்து முடிக்க வேண்டும். இல்லையெனில் ஒவ்வொரு செயலுக்கும் ஊதியத்திலிருந்து ஒரு பொற்காசைக் குறைத்துக் கொள்வார்.

இந்நிபந்தனைகளை ஒப்புக்கொள்பவரையே வேலையில் சேர்த்துக் கொள்வார். நாகப்பனிடம் வேலையில் சேர்ந்த எவரும் இதுவரை ஊதியம் பெற்றதில்லை. ஏனெனில், ஆண்டு முடிவில் அவர் தரும் செயல்களைச் செய்ய முடியாமல் தோல்வியடைந்து வெறுங்கையுடன்தான் சென்றுள்ளனர். இவ்வாறாக நாகப்பன் வேலையாள்களுக்கு ஊதியம் தராமல் ஏமாற்றி வந்தார்.

நாகப்பனின் ஏமாற்றுத்தனத்தை அறிந்த அறிவுநம்பி அவருக்குச் சரியான பாடம் புகட்ட எண்ணினான். நாகப்பனின் நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு வேலையில் சேர்ந்தான். ஓராண்டு முடிவில் ஐயா, நான் பணியில் சேர்ந்து இன்றோடு ஓராண்டு நிறைவடைகிறது ஊதியம் வேண்டும் என்றான். அப்படியா! நிபந்தனைகள் நினைவிருக்கிறதல்லவா? என்று கேட்டார் நாகப்பன்.

அறிவுநம்பி, ஐயா, நன்றாக நினைவிருக்கிறது என்றான். இவ்வூரில் எத்தனை காகங்கள் இருக்கின்றன? எண்ணிச்சொல். இதுதான் முதல் வேலை என்றார் நாகப்பன். ஆயிரத்துப்பத்து என்றான் அறிவுநம்பி. உடனடி பதிலைக் கேட்ட நாகப்பன் சற்றே அதிர்ச்சியடைந்தார். அது எப்படி? என்றார். அறிவுநம்பி சற்றும் தயங்காமல் ஐயமிருந்தால் காகங்களை எண்ணிப்பாருங்கள் எனச் சிரித்துக் கொண்டே சொன்னான். ஆயிரத்துப்பத்துக் காகங்களை விட அதிகமாக இருந்தால் என்ன செய்வது?

அதிகமாக இருந்தால் அவை வெளியூரில் இருந்து வந்தவையாக இருக்கும் என்றான் அறிவுநம்பி. எண்ணிக்கை குறைவாக இருந்தால் என்று நாகப்பன் கேட்டவுடன் இங்குள்ளவை வெளியூருக்குச் சென்றிருக்கும் என்று கூறிக் கலகலவெனச் சிரித்தான் அறிவுநம்பி.

---

## கொடிக்குக் காய் பாராமா?

வேங்கை நாடு ஓர் அழகிய சிறுநாடு. அந்நாட்டை வேங்கை மார்பன் என்னும் மன்னர் ஆண்டு வந்தார். அவர் வயதில் இளையவர். இளைஞர்களால்தான் நாடு முன்னேறும், வயதானவர்கள் இந்த நாட்டுக்குத் தேவையில்லை என்று நினைத்தார்.

மன்னர், தலைமை அமைச்சரை அழைத்து, வயதானவர்களால் நாட்டுக்கு ஒன்றும் பயனில்லை. அவர்களால் எப்பொழுதும் தொல்லைதான் .... அவர்களை என்ன செய்யலாம்? என்று கேட்டார்.

தலைமை அமைச்சருக்கு ஒரே வியப்பு! வயதானவர்களால் பயன் ஒன்றும் இல்லையா? அவர்கள் வீட்டிற்கும் நாட்டிற்கும் சுமையா? கொடிக்குக் காய் பாரமாகுமா? என்று நினைத்தார். ஆனால், அரசனின் ஆணை அல்லவா! அதனால் அவர், வயதானவர்களை நாடு கடத்திவிடலாம் என்றார். அப்படியே செய்யுங்கள் என்று மன்னரும் ஆணையிட்டார்.

நாடெங்கும் ஒரே பரபரப்பு. அரசரின் ஆணை நாடெங்கும் முரசறைந்து அறிவிக்கப்பட்டது. எல்லாக் குடும்பத்தினரும் மிக்க வருத்தத்தோடு வயதானவர்களை எல்லாம் அண்டை நாடுகளுக்கு அனுப்பிவிட்டார்கள். ஆனால், மதிவாணன் என்னும் இளைஞன், தன் வயதான தந்தையின்மீது கொண்ட அன்பால் அவ்வாறு செய்யவில்லை. தன் வீட்டிலேயே ஒரு மறைவான இடத்தில் வைத்துப் பாதுகாத்து வந்தான்.

ஒருநாள், வேங்கை நாட்டு அரசவைக்கு விருந்தினராக ஓர் அறிஞர் வந்தார். அவர் பெயர் செழியன். வேங்கைமார்பன் அவரை அன்புடன் வரவேற்றார். அவையில் அமர வைத்தார். அறிஞர் செழியன் அவையினரைப் பார்த்து, இந்நாட்டில் நான் சொல்வது போல் செய்யக்கூடிய ஆற்றல் உள்ளவர் எவரேனும் உண்டா? என்று வினா எழுப்பினார். மன்னரும் அவையினரும் என்ன செயல் அது? என்று வினவினர்.

சாம்பலைக் கயிறாகத் திரிக்க வேண்டும், வெண்சங்கில் நூலைக் கோத்துத் தரவேண்டும் - செய்யமுடியுமா? என்று கேட்டு ஏளனமாகச் சிரித்தார் செழியன். சாம்பலைக் கயிறாகத் திரிப்பதா! என்ன கோமாளித்தனம்! என்றார் மன்னர். அவையினரோ, இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது என்றனர்.

அவையினரை நோக்கி, யாரேனும் இச்செயலைச் செய்து காட்ட முடியுமா? என்று அரசர் வினவினார். எல்லாரும் அமைதியாக இருந்துவிட்டனர்.

மன்னர், புதிதாக வந்த அறிஞரிடம், இரண்டு நாள்கள் பொறுங்கள், நீங்கள் சொன்னதைச் செய்து காட்டுவோம் என்றார். அவை கலைந்தது.

மறுநாள் முரசறைந்து, பொதுமக்களுக்கு இச்செய்தி தெரிவிக்கப்பட்டது. அறிஞர் கூறிய செயல்களைச் செய்பவருக்கு ஆயிரம் பொற்காசுகள் வழங்கப்படும் என்றும் அறிவிக்கப்பட்டது.

மதிவாணன், தன் தந்தையிடம் இதைக் கூறினான். தந்தையோ, இவ்வளவுதானே! நான் சொல்லுகிறபடி செய்து, அதை அரண்மனைக்கு எடுத்துச் செல் என்றார். மதிவாணன் அரசவை சென்றான்.

ஒரு தட்டில் சாம்பலால் ஆன கயிரை வைத்து அரசவையில் காட்டினான். சங்கில் நூலைக் கோத்தும் வைத்திருந்தான். எல்லாரும் கைத்தட்டி ஆரவாரம் செய்தனர். ஆகா! எப்படி! எப்படி! என்று அனைவரும் வியந்தனர்.

மன்னர், ஆயிரம் பொற்காசுகளைத் தட்டில் வைத்து மதிவாணனுக்குப் பரிசாக அளித்தார். மன்னர் மதிவாணனைப் பார்த்து, இதை எப்படிச் செய்தாய்? என்று வினவினார்.

இளைஞன் மன்னனை நோக்கி, அரசே! அஃது எளிது. ஒரு கயிறைத் துண்டு துண்டாக வெட்டினேன். ஒரு துண்டைத் தட்டில் வைத்தேன், அதைத் தீ வைத்துக் கொளுத்தினேன். அது பற்றி எரிந்தது. தீ அணைந்தபின் சாம்பல் கயிறு போலக் காட்சியளித்தது. அதனைக் கலையாமல் கொண்டுவந்து காட்டினேன் என்றான். அதுசரி, சங்கில் நூல் எவ்வாறு ஒருபக்கம் இருந்து மறுபக்கம் சென்றது? என்று மன்னர் வினவினார்.

ஒரு கட்டெறும்பில் மெல்லிய நூலைக் கட்டினேன். சங்கின் எதிர்புறத்தில் கற்கண்டுத் துண்டு ஒன்றை வைத்தேன். எறும்பு தானாகச் சங்கினுள் நுழைந்து கற்கண்டை நோக்கி எதிர்புறம் வந்துவிட்டது. எறும்பை விட்டுவிட்டேன். நூலைக் கோத்துவிட்டேன் என்றான் மதிவாணன். நன்று! நன்று! ஆனால், இந்தச் செயலை நீயாகச் செய்தாயா? வேறு யாரேனும் உனக்குச் சொல்லிக் கொடுத்தார்களா? என்றார் மன்னர்.

மதிவாணன் சிறிது நேரம் அமைதியாக நின்றான். பிறகு, அரசே! தங்கள் ஆணையை மீறிவிட்டதற்குப் பொறுத்தருள வேண்டும். நான், வயதான என் தந்தையை யாருக்கும் தெரியாமல் வீட்டிலேயே வைத்துப் பாதுகாத்து வருகிறேன். அவர்தான் இந்தச் செயலைச் செய்ய எனக்கு வழிகாட்டினார் என்றான்.

மன்னர்க்குத் தெளிவு ஏற்பட்டது. வயதான முதியவர்களால் நாட்டுக்குக் கேடு ஒன்றும் இல்லை. ஒருநாடு முன்னேற வேண்டுமானால் இளைஞர்களின் செயல் வேகமும், வயதானவர்களின் பட்டறிவும், அவர்தம் வழிகாட்டலும் தேவை என்பதை உணர்ந்தார். வயதானவர்கள் அனைவரும் நாடு திரும்ப மன்னர் ஆணை பிறப்பித்தார். மக்கள் மகிழ்ந்தனர்.

---